4th July 1962]

திரு. கே. மூக்கையா தேவர் : எந்த அடிப்படையில் இந்த இடங்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** பரவலான முறையிலே இம் மாதிரி ஏழு இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன.

திரு. கே. மூக்கையா தேவர் : இந்தத் திட்டத்தை நிறை வேற்றுவதற்காக இடங்களைத் தேர்ந்தெடுக்கும்பொழுது, எந்த அடிப்படையிலே எடுக்கப்படுகின்றன?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஏழு ஸ்தலங்களைத் தேர்ந் தெடுக்கவேண்டும். ஏதாவது ஏழு இடங்களைத்தான் தேர்ந் தெடுக்க முடியும். அப்படித் தேர்ந்தெடுக்கும்பொழுது, ஒரே மாவட்டத்திலே இல்லாமல், பரவலான முறையிலே தேர்ந்தெடுக் கிறோம்.

**கனம் சபாநாயகர் :** கேள்விகள் முடிவடைந்தன.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member**]

* திரு. ஜே. மாதா கவுடர் : ஆன் எ பாயின்ட் ஆப் இன்பர் மேஷன், ஸார். கேள்வி நேரத்திற்காக நாம் ஒரு மணி நேரம் ஒதுக்கியிருக்கிறோம். அரை மணி நேரத்திற்குக்கூட கேள்விகள் வரவில்லை. ஏராளமான கேள்விகளை அங்கத்தினர்கள் கொடுத் திருக்கிறார்கள். இந்த கேள்விகளுக்கெல்லாம் சம்பந்தப்பட்ட இலாகாக்களிலிருந்து உடனடியாக பதில்கள் வருவதற்கு கனம் சபாநாயகர் அவர்கள் கவனிப்பார்களா என்று அறிய விரும்பு கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** நாம் நிச்சயமாக இந்த மாதம் 28-ம் தேதிவரையில் கூட்டம் நடத்துவோம். அதற்குள்ளாக, அநேகமாக அனுப்பப்பட்ட கேள்விகளுக்கு எல்லாம் விடை அளிக்கப்படுமென்று நான் நம்புகிறேன்.

## II.—STATEMENT BY A MEMBER *re* HIS SUPPLEMENTARY QUESTION.

திரு. மீ. கலியாணசுந்தரம் : ஆன் எ பாயின்ட் ஆப் பெர்ஸனல் எக்ஸ்பிளனேஷன், ஸார். நேற்றைய தினம் கேள்வி நேரத்தின் போது, நான் கொடுத்த தகவலில் ஒரு தவறைத் திருத்துவதற் காக நான் எழுந்து நிற்கிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ மூக்கையா தேவர் சர்க்கார் உத்யோகஸ்தர்களின் மருத்துவச் சலுகைகள் சம்பந்தமாக கேள்வி போட்டபொழுது நான் ஒரு உப கேள்வியைக் கேட்டது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும். அந்த உப கேள்வியில், விலை உயர்ந்த மருந்துகளை என்.ஜி.ஓ.-க் களுக்கு அளிக்கக்கூடாது என்று அரசாங்கம் உத்தரவு போட்டிருக் கிறதா என்று கேட்டேன். கனம் முதல் அமைச்சர் அவர்கள், அப்படியிருந்தால் அந்த உத்தரவைக் காட்டுங்கள் என்று கேட்டார். அது அரசாங்க உத்தரவு அல்ல. டைரக்டர் ஆப் மெடிகல் செர்விஸ் அனுப்பியிருக்கக்கூடிய ஒரு சுற்றறிக்கை

[திரு. மீ. கலியாணசுந்தரம்] [4th July 1962

இரண்டு வருடங்களுக்கு முன்னர் என் கைக்கு வந்தது. பழைய சட்ட சபையிலே கூட நான் இதைப்பற்றி ஒரு கேள்வி கொடுத்திருந்தேன். ஆனால் அதற்கு விடையளிக்கப்படவில்லை. என்னுடைய பழைய ரிக்கார்டுகளிலிருந்து அந்த சுற்றறிக்கையை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். தங்கள் மூலமாக அதை கனம் அமைச்சர் அவர்களிடம் கொடுக்கிறேன். அதை கவனிக்கு மாறு கேட்டுக்கொள்கிறேன்.

*(கனம் அங்கத்தினர் சுற்றறிக்கையை கனம் மருத்துவ அமைச்சர் அவர்களிடம் சமர்ப்பித்தார்.)*

## III.—ADJOURNMENT MOTION *re* POWER-CUT IN THE STATE.

**கனம் சபாநாயகர்:** கனம் அங்கத்தினர் ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் மின்சாரப் பற்றுக்குறையைப் பற்றி ஒரு ஒத்தி வைப்புப் பிரேரணை நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அது இப்பொழுதுதான் கொடுக்கப்பட்டது. அதில் குறிப்பிட்டுள்ள விஷயத்தையும் சேர்த்து நாளையதினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் 41-வது விதியின்கீழ் கொடுக்கப்போகிற ஸ்டேட்மெண்டில் பதில் சொல்லுவார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஆதலால் இந்த ஒத்திவைப்பு பிரோரணைக்கு அவசியமில்லை. நான் இன்னொன்று சொல்ல விரும்புவது என்னவென்றால்:

"A member desirous of moving a motion for an adjournment of the business of the House for the purpose of discussing a definite matter of urgent public importance shall, before the commencement of the sitting of the Assembly at which he proposes to ask for leave of the House to make his motion, hand to the Secretary three copies of a statement in writing of the matter proposed to be discussed, and obtain the Speaker's consent to his asking for leave to make the motion".

மூன்று காப்பிகளுடன் முன்னதாகவே கொடுத்தால், ஒருவேளை சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு அனுப்பி, அவர்களும் தயாராக வரலாம் என்ற நோக்கத்தோடு போட்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. இனிமேல் அவ்வாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்று நேரம் இல்லாத காரணத்தினாலே திரு. சா. கணேசன் அவர்கள் திடீரென்று கொடுத்திருக்கலாம். இந்த அட்ஜர்ன்மென்ட் மோஷனுக்கு அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். நாளைக்கு கனம் மந்திரி அவர்கள் கொடுக்கப் போகும் ஸ்டேட்மென்டில் இதையும் சேர்த்துச் சொல்லுவார்கள் என்று நினைக்கிறேன்.

**திரு. சா. கணேசன்:** இந்த ஒத்திவைப்பு பிரேரணையைக் கொடுத்ததின் நோக்கம் கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு இந்த விஷயத்தைக் கொண்டுவரவேண்டும் என்பதற்காகத் தான். வட ஆற்காடு ஜில்லாவிலே ஆரணி பிர்காவிலே மூன்று